

தமிழ்நூல் பதிப்புப் பணியில் அயராது உழைத்துத் தமக்கு என ஓர் சீரிய இடத்தைப் பெற்றுள்ளவர் டாக்டர் வே. இரா. மாதவன் எம்.ஏ., பி.எட்., பிஎச்.டி., அவர்கள்.

வடஆர்க்காடு மாவட்டம் வேலூரில் பிறந்த இவர் தமிழ், ।றிவியல், கல்வியியல், சுவடியியல் சித்த மருத்துவம், ஓவியம் பான்ற பல துறைகளிலும் பட்டங்களும் பட்டயங்களும் ।பற்றவர்.

ஆசிரியப்பணியிலும் ஆய்வுப்பணியிலும். நன்முயற்சியும் ஊக்க ம்ம் ஆற்றலும் கொண்ட இவர் ஒரு சிறந்த ஓவியராகவும், மரபுக் ;விஞராகவும், உரையாசிரியராகவும் திகழ்கின்றார்.

தமிழ் இலக்கியச் சுவடிகள். மருத்துவச் சுவடிகள் ஆகியவற்றை ஆராய்வதில் மிகுந்த பயிற்சியும் திறமையும் பெற்றவர். தமிழ்ச் ஃவடியியலில், குழந்தை மருத்துவச் சுவடிகளை ஆய்வு செய்து, சென்னைப் பல்கலைக் கழகத்தில் முதன் முதலில் டாக்டர் பட்டம் பெற்ற பெருமையுடையவர்.

சென்னை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் ஆறு ஆண்டுகள் சிறக்கப் பணிபுரிந்த பின்னர்த் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் கடந்த எட்டு ஆண்டுகளாகப் பணியாற்றி வருகின்றார்.

நூற்றுக்கு மேற்பட்ட ஆய்வுக்கட்டுரைகளை எழுதியளித்துள்ள இவர் இருபத்தைந்திற்கும் மேற்பட்ட நூல்களைப் பதிப்பித்து வழங்கியுள்ளார். எழுத்துலகில் எவ்விதச் சார்புமின்றி, அமைதி யாக உழைத்துவரும் இவருக்குக் கிடைத்துள்ள பரிசுகளும் பாராட்டுகளும் மிகப்பல.

இவர் அரிதின் முயன்று பதிப்பித்துள்ள 'கண்மருத்துவம்' என்ற நூலுக்கு 1982 ஆம் ஆண்டின் சிறந்த மருத்துவ நூலுக்கான முதற்பரிசையும், 'சித்திரக்கவிகள்' என்ற நூலுக்கு 1983ஆம் ஆண்டின் சிறந்த மொழி இலக்கியம் பற்றிய ஆய்வு நூலுக்கான முதற்பரிசையும் அளித்து தமிழக அரசு இவரைப் பெருமைப்படுத்தி யிருக்கிறது.

'காலம் பொன் போன்றது, கடமை கண் போன்றது' என்னும் குறிக்கோளே இவர்தம் குறிக்கோள். இவர்தம் இடைவிடா உழைப்புப் பலரால் சிறப்பாகப் பாராட்டப் பெறும்.

—பாவை வெளியீட்டகத்தார்